# Pathuppāttu – Pattinappālai

## <u>பட்டினப்பாலை</u>

**Translated by Vaidehi Herbert**

**பாடியவர் – கடியலூர் உருத்திரங்கண்ணனார்**
**பாடப்பட்டவன் – திருமாவளவன் (கரிகாற் பெருவளத்தான்)**
**திணை – பாலை**
**துறை – செலவழுங்குதல்**
**பாவகை – ஆசிரியப்பா, வஞ்சி**
**மொத்த அடிகள் – 301**

**தமிழ் உரை நூல்**
**பத்துப்பாட்டு (2 பகுதிகள்) – பொ. வே. சோமசுந்தரனார் – சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை**

**நச்சினார்க்கினியர் உரை: இது பட்டினத்தைச் சிறப்பித்துக் கூறிய பாலைத் திணையாகலின், இதற்கு பட்டினப்பாலையென்று பெயர் கூறினார். பாலையாவது பிரிதலும் பிரிதல் நிமித்தமும் கூறுவது. இப்பாட்டு வேற்று நாட்டு அகல்வயின் விழுமத்துத் தலைவன் செலவு அழுங்கிக் கூறியது.**

This song has 301 lines. They are written in Vanji meter and Āsiriyappā/Akaval meter. The vanji lines were introduced to effect a change in the rhythm. The song was written by Kadiyalūr Urithirankannanār who also wrote Perumpānātruppadai. The king was Chōlan Karikālan. This song is about the proposed separation of a woman from her lover who wants to go to Kaveripoompattinam, the capital city of the Chōla kingdom. The song describes the harbor, the big ships that arrive with merchandise, fishermen, dancing, wine drinking, Buddhist and Jain monasteries and as well the worship of Murukan. It describes Karikālan’s struggle to regain his rightful throne and his invasion of enemy countries. It also describes his activities during peaceful times and his patronage of artists. Works written in the 11th and 12th centuries A.D. say that Karikālan gave 1,600,000 gold pieces to the bard for his song.

## காவிரியின் பெருமை

**வசையில் புகழ் வயங்கு வெண்மீன்
திசை திரிந்து தெற்கு ஏகினும்
தற்பாடிய தளி உணவின்
புள் தேம்பப் புயல் மாறி
வான் பொய்ப்பினும் தான் பொய்யா
மலைத் தலைய கடல் காவிரி
புனல் பரந்து பொன் கொழிக்கும்** (1-7)

### Kāviri's Pride

Even if the faultless, famous, bright
Venus drifts to the south, even if the
skylarks are distressed without rain drops
to drink and even if the rain clouds change
and the skies fail,
Kāviri, which starts in the mountains
and ends in the ocean, does not fail.
Its flowing water
spreads and showers abundant prosperity.

**Notes:** **புறநானூறு** 35 – **இலங்கு கதிர் வெள்ளி தென்புலம் படரினும் அம் தண் காவிரி வந்து கவர்பு ஊட்ட. வானம்பாடி: கலித்தொகை** 46 – **துளி நசை வேட்கையான் மிசை பாடும் புள்ளின்**, **அகநானூறு** 67 – **வானம் வாழ்த்தி பாடவும் அருளாது உறை துறந்து எழிலி**, **ஐங்குறுநூறு** 418 – **வானம்பாடி வறம் களைந்து ஆனாது அழி துளி தலைஇய**, **புறநானூறு** 198 – **துளி நசைப் புள்ளின். வெள்ளி திசை மாறினும்: புறநானூறு** 35 – **இலங்கு கதிர் வெள்ளி தென்புலம் படரினும்**, **புறநானூறு** 117 – **தென் திசை மருங்கின் வெள்ளி ஓடினும்**, **புறநானூறு** 388 – **வெள்ளி தென் புலத்து உறைய**, **புறநானூறு** 389 – **வெண்பொன் போகுறு காலை**, **மதுரைக்காஞ்சி** 108 – **வரும் வைகல் மீன் பிறழினும்**, **பட்டினப்பாலை** 1 – **வயங்கு வெண்மீன் திசை திரிந்து தெற்கு ஏகினும். மலையில் பிறந்த**

**காவிரி: பட்டினப்பாலை** 6-7 – **மலைத் தலைய கடல் காவிரி புனல் பரந்து பொன் கொழிக்கும்**, **மலைபடுகடாம்** 327-328 – **குடமலைப் பிறந்த தண் பெருங் காவிரி கடல் மண்டு அழுவத்துக் கயவாய் கடுப்ப**.

**Meanings:** **வசை இல்** – without blemish, without fault, **புகழ்** – fame, **வயங்கு வெண்மீன்** – bright Venus, gleaming silver/white star, **திசை** – direction (north), **திரிந்து** – changing, **தெற்கு ஏகினும்** – even if it goes south, **தற்பாடிய** – skylarks (**வானை நோக்கிப் பாடுவது வானம்பாடி**, **ஆதலின் தற்பாடி என்றனர்**), **தளி உணவின்** – rain drops as food, **புள்** – birds (skylarks), **தேம்ப** – to be sad, **புயல் மாறி** – rain not falling, rain clouds not coming down, **வான் பொய்ப்பினும்** – even if the clouds fail, even if the sky fails, **தான்** – it, the river (Kāviri), **பொய்யா** – does not fail, **மலை** – mountains (Western Ghats), **தலைய** – originating, **கடல் காவிரி** – Kāviri which reaches the ocean, **புனல் பரந்து** – flowing water is spread, **பொன் கொழிக்கும்** – brings abundant prosperity/gold

## மருத நிலத்தின் வளமை

**விளைவு அறா வியன் கழனி**
**கார்க் கரும்பின் கமழ் ஆலைத்**
**தீத் தெறுவின் கவின்**
**வாடி நீர்ச் செறுவின் நீள் நெய்தல்**
**பூச்சாம்பும் புலத்து ஆங்கண்**
**காய்ச் செந்நெல் கதிர் அருந்து**
**மோட்டு எருமை முழுக் குழவி**
**கூட்டு நிழல் துயில் வதியும்**
**கோள் தெங்கின் குலை வாழை**
**காய்க் கமுகின் கமழ் மஞ்சள்**
**இன மாவின் இணர்ப் பெண்ணை**
**முதல் சேம்பின் முளை இஞ்சி** (8-19)

### Prosperity of Agricultural Lands

There are continuous yields from wide fields. Fragrant smells waft from sugar mills and heat from their

fires wilt the waterlilies in nearby
fields, making them lose their beauty.

Fully grown calves of buffaloes
that eat mature, red paddy sleep in
the shade of tall granaries.

There are coconut palms with clusters
of nuts, banana trees with bunches of
fruits, betel nut palms with mature nuts,
fragrant turmeric, many kinds of mangoes,
clusters of palmyra fruits and harvests
of yam and tender ginger in the Chōla
country.

**Meanings:** **விளைவு** – yield, **அறா** – unending, not changing, **வியன்** – wide, **கழனி** – fields, **கார்க்கரும்பு** – dark colored sugarcane, mature sugarcane, **கமழ்** – fragrant, **ஆலை** – sugar mills, **தீத்தெறுவின்** – because of the fire's heat, **கவின்** – beauty, **வாடி** – get wilted, lose luster, **நீர்ச்செறுவின்** – of the fields with water, **நீள்** – long, **நெய்தல்** – waterlilies – blue or white, **பூச் சாம்பும் புலத்து** – flowers fade in that place, **ஆங்கண்** – there, **காய்ச் செந்நெல்** – mature fine paddy, mature red paddy, **அருந்து** – eating, **மோட்டு எருமை** – buffaloes with stomachs, big buffaloes, (**மோடு** = **வயிறு**, **உயர்ச்சி**, **பெரிய**), **முழுக்குழவி** – mature calves, **கூட்டு நிழல்** – shade of grain bins, **துயில்** – they sleep, **வதியும்** – they stay, **கோள் தெங்கின்** – with coconut palms with clusters, **குலை வாழை** – banana trees with bunches of fruits, **காய்க் கமுகின்** – with the betel nut trees, **கமழ் மஞ்சள்** – fragrant turmeric, **இன மாவின்** – with many kinds of mango trees, **இணர்ப் பெண்ணை** – palmyra trees with clusters, **முதல் சேம்பின்** – with yam tubers, Colocasia esculenta, **முளை இஞ்சி** – ginger plants with sprouts

## காவிரிப்பூம்பட்டினத்தின் செல்வச் செழிப்பு

**அகல் நகர் வியன் முற்றத்துச்**
**சுடர் நுதல் மட நோக்கின்**
**நேர் இழை மகளிர் உணங்கு உணாக் கவரும்**
**கோழி எறிந்த கொடுங்கால் கனங்குழை**
**பொற்கால் புதல்வர் புரவி இன்று உருட்டும்**
**முக்கால் சிறு தேர் முன் வழி விலக்கும்**

**விலங்கு பகை அல்லது கலங்கு பகை அறியா**
**கொழும் பல் குடிச் செழும் பாக்கத்துக்** (20-27)

**The Prosperity of Kāviripoompattinam**

Women with bright brows, fine jewels and delicate looks, dry food in the wide front yards of their huge houses, and chase hens that come to steal their food, throwing at them their gold earrings, heavy and curved at the bases, hindering the horseless, three-wheeled toy chariots rolled by youngsters wearing gold anklets.

These are the only hindrances in that flourishing city where different groups of people live without any other difficulty or fear.

**Meanings:** **அகல் நகர்** – huge houses, wealthy houses, **வியன் முற்றத்து** – in the wide yards, **சுடர் நுதல்** – bright foreheads, **மட நோக்கின்** – with delicate looks, **நேர் இழை** – fine jewels, perfect jewels, **மகளிர்** – women, **உணங்கு** – drying, **உணா** – food stuff, **கவரும்** – come to take, come to eat, **கோழி** – hens/fowls/chicken, **எறிந்த** – thrown, **கொடுங்கால்** – curved base, **கனங்குழை** – heavy earrings – Nachinārkkiniyar interprets the word **கனம்** as **பொன்**, **பொற்கால்** – legs wearing gold ornaments, **புதல்வர்** – young boys, sons, **புரவி இன்று உருட்டும்** – rolled without horses, **முக்கால் சிறு தேர்** – three-wheeled small chariot (**நடை வண்டி**, **தள்ளு வண்டி**, child’s walker), **முன் வழி விலக்கும்** – blocks the front side, **விலங்கு பகை** – blocking hindrances, **அல்லது** – other than that, **கலங்கு பகை** – confusing hindrances, **அறியா** – do not know, **கொழும்** – prosperous, **பல் குடி**- many communities, **செழும் பாக்கத்து** – in the flourishing seashore city

## காவிரிப்பூம்பட்டினத்துத் தோட்டங்கள், தோப்புகள், பூஞ்சோலைகள்

**குறும்பல்லூர் நெடுஞ்சோணாட்டு**
**வெள்ளை உப்பின் கொள்ளை சாற்றி**
**நெல்லொடு வந்த வல்வாய்ப் பஃறி**
**பணை நிலைப் புரவியின் அணை முதல் பிணிக்கும்**
**கழி சூழ் படப்பை கலியாணர்ப்**
**பொழில் புறவின் பூந்தண்டலை** (28-33)

### Gardens and Groves of Kāviripoompattinam

In the huge Chōla country with many small towns, sturdy boats with paddy got by bartering salt, are tied to posts on the shores of the backwaters, like horses tied in a stable.

Kāviripoompattinam has backwaters surrounding the groves. Its orchards yield prosperity and its groves have abundant flowers.

**Notes:** **பொ. வே. சோமசுந்தரனார் உரை** – **ஈண்டு உப்பிற்கு பண்ட மாற்றாகக் கொண்ட நெல் என்க**. Akanānūru 140 – **நெல்லின் நேரே வெண் கல் உப்பு**, Akanānūru 390 – **நெல்லும் உப்பும் நேரே ஊரீர் கொள்ளீரோ**, Kurunthokai 269 – **உப்பை மாறி வெண்ணெல் தரீஇய**. Barter is mentioned in Akanānūru 60, 61, 126, 140, 245, 296, 390, Natrinai 183, Kurunthokai 221, 269, Ainkurunūru 47, Porunarātruppadai 214-215, 216-7, Pattinappālai 28-30, and Malaipadukādam 413-414.

**Meanings:** **குறும் பல் ஊர்** – many small towns, **நெடும் சோணாட்டு** – vast Chōla country's, **வெள்ளை உப்பின்** – white salt's, **கொள்ளை சாற்றி** – announcing the purchase price, calling out the purchase price, **நெல்லொடு வந்த** – came with rice paddy, **வல்வாய் பஃறி** – sturdy boats, **பணை நிலை** – standing in the stalls, **புரவியின்** – like horses, **அணை** – raised bank, shore wall, **முதல் பிணிக்கும்** – tied to posts, **கழி** – brackish waters, backwaters, **சூழ்** – surrounded, **படப்பை** – groves, **கலி யாணர்** – new income, abundant prosperity, **பொழில்** – orchards, **புறவின்** – nearby, on the side, **பூந்தண்டலை** – flower-filled groves

### பொய்கையும் ஏரியும்

**மழை நீங்கிய மா விசும்பில்**
**மதி சேர்ந்த மக வெண்மீன்**
**உரு கெழு திறல் உயர் கோட்டத்து**
**முருகு அமர் பூ முரண் கிடக்கை**
**வரி அணி சுடர் வான் பொய்கை**
**இரு காமத்து இணை ஏரி** (34-39)

**Lakes and pond**

In the vast land, there is a bright pond
that is beautiful as in a painting, with
a well-built high shoreline surrounded
by many fragrant flowers, looking like
the white makam star near the moon in the
huge sky without clouds.
There are two lakes signifying the pleasures
of both this world and the next one.

**Notes:** **உயர் கோட்டத்து** – **பொ**. **வே**. **சோமசுந்தரனார்** – '**உயர்ந்த கரைகளையுடைய**', **நச்சினார்க்கினியர்** – '**இனி உயர் கோட்டத்தை எல்லாரும் மதியைச் சேர்ந்த மகவெண்மீனைப் பார்க்கைக்கு இடமாகிய கோயிலாக்கிக் கோயிலும் பொய்கையும் என எண்ணுதலுமாம்**; **இனிப் பொய்கைக் கரையிலே கோயிலாக்கி கோயிலும் பொய்கையும் மதி சேர்ந்த மகவெண்மீன் போன்ற வென்றுமாம்**'.

**Meanings:** **மழை நீங்கிய** – clouds removed, without clouds, **மா விசும்பின்** – in the huge sky, **மதி சேர்ந்த** – near the moon, **மக வெண்மீன்** – a white star called Makam which is the tenth lunar star, **உருகெழு** – with fine structure, **திறல்** – strength, **உயர் கோட்டத்து** – with tall banks, with tall temples, **முருகு அமர்** – with fragrance, **பூ முரண் கிடக்கை** – many kinds of flowers were there, **வரி** – drawing/painting, **அணி** – beauty, **சுடர்** – brightness, **வான் பொய்கை** – bright ponds, lovely ponds, **இரு காமத்து** – two kinds of pleasures (of this world and of the next world), **இணை ஏரி** – two adjoining lakes

## காவிரிப்பூம்பட்டினத்து அட்டில் சாலைகள்

**புலிப் பொறி போர் கதவின்**
**திருத்துஞ்சும் திண் காப்பின்**
**புகழ் நிலைஇய மொழி வளர**
**அறம் நிலைஇய அகன் அட்டில்**
**சோறு வாக்கிய கொழுங்கஞ்சி**
**யாறு போலப் பரந்து ஒழுகி**
**ஏறு பொரச் சேறு ஆகி**
**தேர் ஓடத் துகள் கெழுமி**
**நீறு ஆடிய களிறு போல**
**வேறு பட்ட வினை ஓவத்து**
**வெண் கோயில் மாசு ஊட்டும்**. (40-50)

**The Public Kitchens in Kāviripoompattinam**

For its fame to spread and last and justice to exist, there are well protected public kitchens with tightly fitting doors bearing the Chōla tiger symbol.

Thick water, drained from cooked rice poured on streets, runs like rivers, and bulls fight with each other creating mud.

Passing chariots spread dust, soiling the white palace walls that were created using various skills and decorated with paintings, making it appear like a male elephant that had just played in fine dust.

**Meanings:** **புலிப் பொறி** – tiger symbol (the symbol of the Chōlas), **போர்க் கதவின்** – on the tightly fitting doors, **திருத் துஞ்சும்** – wealth resides, **திண் காப்பின்** – with strong protection, **புகழ் நிலைஇய** – for fame to be established, **மொழி வளரவும்** – for words about fame to spread, **அறம் நிலைஇய** – for justice to stand, **அகன் அட்டில்** – huge kitchen, **சோறு வாக்கிய** – drained from cooked rice, **கொழுங் கஞ்சி** – thick rice water, **ஆறு போலப் பரந்து ஒழுகி** – spreads and flows like a river (on the streets), **ஏறு பொரச் சேறு ஆகி** – oxen fight with each other and create slushy mud (the oxen were fighting for the rice kanji, according to Po. Ve. Somasundaranar), **தேர் ஓட** – chariots running

over it, **துகள் செழுமி** – dust filled, **நீறு ஆடிய களிறு போல** – like a male elephant which played in the dust, **வேறு பட்ட வினை** – created with many different skills, **ஓவத்து** – with paintings, **வெண் கோயில்** – white palace, **மாசு ஊட்டும்** – they soil it

## மாட்டுக் கொட்டில்

**தண் கேணி தகை முற்றத்துப்**
**பகட்டு எருத்தின் பல சாலை** (51-52)

**Stables**

There are many stables with strong bulls in the front yards with ponds with cold water.

**Meanings:** **தண் கேணி** – wells with cold water, ponds with cold water, **தகை முற்றத்து** – having in the front yards, **பகட்டு எருத்தின்** – of strong bulls, **பல சாலை** – many stables

## காவிரிப்பூம்பட்டினத்துத் தவப்பள்ளியும் வேள்விச்சாலையும்

**தவப் பள்ளித் தாழ் காவின்**
**அவிர் சடை முனிவர் அங்கி வேட்கும்**
**ஆவுதி நறும் புகை முனைஇ குயில் தம்**
**மா இரும் பெடையோடு இரியல் போகிப்**
**பூதம் காக்கும் புகல் அரும் கடி நகர்த்**
**தூதுணம் புறவொடு துச்சில் சேக்கும்** (53-58)

**Monasteries and Ritual Grounds**

There are monasteries and ritual grounds in dense groves where sages with long, bright hair perform rituals. Unable to

bear the fragrant smoke from fires, male
cuckoos leave, flying away with their dark,
big females to the city that is difficult to
access, protected by demons, and join
the pigeons that eat tiny pebbles with food.

**Notes: தவப்பள்ளி (53)** – **நச்சினார்க்கினியர் உரை** – **தவஞ் செய்யும் அமண் பள்ளி பௌத்த பள்ளி**.

**Meanings: தவப்பள்ளி** – monasteries where monks live, **தாழ் காவின்** – in the dense groves, **அவிர் சடை முனிவர்** – sages with bright hair, sages with bright braids, **அங்கி** – fire, **வேட்கும்** – performing rituals, **ஆவுதி** – rituals, ritual materials, **நறும் புகை** – fine fragrance, **முனைஇ** – hating, **குயில் தம் மா இரும் பெடையோடு** – cuckoos with their dark large females, **இரியல் போகி** – move away to another place, **பூதம் காக்கும்** – protected by demons, **புகல் அரும்** – difficult to enter, **கடி நகர்** – protected city, **தூது உணம்** – eating small pebbles, **புறவொடு** – with pigeons, with doves (**புறாவோடு**), **துச்சில்** – abodes, protected spaces, **சேக்கும்** – they reach

## விளையாட்டுக் களத்தில் மறவர்களின் போர்

**முது மரத்த முரண் களரி
வரி மணல் அகன் திட்டை
இருங்கிளை இனன் ஒக்கல்
கருந்தொழில் கலி மாக்கள்
கடல் இறவின் சூடு தின்றும்
வயல் ஆமை புழுக்கு உண்டும்
வறள் அடும்பின் மலர் மலைந்தும்
புனல் ஆம்பல் பூச் சூடியும்
நீல் நிற விசும்பின் வலன் ஏர்பு திரிதரு
நாள்மீன் விராய கோள்மீன் போல
மலர்தலை மன்றத்துப் பலருடன் குழீஇ
கையினும் கலத்தினும் மெய்யுறத் தீண்டி
பெருஞ் சினத்தான் புறங் கொடாது**

இருஞ் செருவின் இகல் மொய்ம்பினோர்
கல் எறியும் கவண் வெரீஇப்
புள் இரியும் புகர்ப் போந்தை (59-74)

**Martial Art Field**

Shifting sands have spread in wide
striped patterns and old trees
provide shade in a barren field where
strong men show off their strengths.

They gather with their many relatives
and hordes of people from their clan.
Warriors eat roasted shrimp and boiled
field tortoises. They wear *adumpu* flowers
that grow on the sand, along with white
waterlilies that bloom in ponds.

The crowds milling around in the vast
common grounds are like stars that
rise up with strength and mingle with
planets in the blue sky. Men with great
body strength, filled with rage, hit body
against body and fight with hands and
weapons without backing off.

Fearing the stones from the slingshots of
strong men, birds flee, abandoning the
palmyra trees with spots.

**Notes:** வலன் (67) – பொ. வே. சோமசுந்தரனார் உரை, நெடுநல்வாடை (1) – வலப் பக்கம், வலன் ஏர்பு – அகநானூறு 43, 84, 188, 278, 298, 328, நற்றிணை 37, 264, 328, குறுந்தொகை 237, ஐங்குறுநூறு 469, பதிற்றுப்பத்து 24, 31, நெடுநல்வாடை 1, பட்டினப்பாலை 67, முல்லைப்பாட்டு 4, திருமுருகாற்றுப்படை 1, மதுரைக்காஞ்சி 5 – வல மாதிரத்தான் வளி கொட்ப. கல் எறியும் கவண் வெரீஇ (73) – பொ. வே. சோமசுந்தரனார்

**உரை – பனை மரத்து உச்சியில் இலக்கு வைத்து எறிதலின் ஆண்டு வாழும் பறவைகள் ஓடின என்க. இங்கனம் இலக்குக் கொண்டு கல்லால் எறிதல் உண்மையால் ஆண்டு நிற்கும் பனைகள் கல்லேற்றின் வடுவுடையன என்பார், புகார்ப் போந்தை என்றார்.**

**Meanings:** **முது மரத்த** – with old trees, **முரண் களரி** – arena where brave men show off their strength, **வரி மணல்** – rippled sand, stripes of sand, **அகன் திட்டை**- wide mounds, **இருங்கிளை** – big group of relatives, **இனன் ஒக்கல்** – clan people, related people, **கருந்தொழில்** – war business, harsh business, **கலி மாக்கள்** – arrogant warriors, proud warriors, **கடல் இறவின்** – ocean shrimp's, **சூடு தின்றும்** – roasted the flesh and ate, **வயல் ஆமை** – field tortoises, **புழுக்கு உண்டும்** – boiled and ate, **வறள் அடும்பின்** – *adumpu* flowers in the sand, Ipomoea pes caprae, **மலர் மலைந்தும்** – adorned with flowers, **புனல் ஆம்பல்** – white water lilies growing in water, **பூச்சூடியும்** – wearing flowers, **நீல் நிற விசும்பின்** – in the blue sky, **வலன் ஏர்பு** – climb on the right side, climb with strength, **திரிதரு** – roaming, **நாள்மீன் விராய** – with the stars, with the sun, **கோள்மீன் போல** – like the planets, **மலர்தலை மன்றத்து** – in the vast common grounds, **பலருடன் குழீஇ** – joining together with many others, **கையினும்** – with their hands, **கலத்தினும்** – with their weapons, **மெய் உறத் தீண்டி** – hitting body against body, **பெருஞ்சினத்தால்** – with great anger, **புறக்கொடாது** – not showing their backs and leaving, **இருஞ்செருவின்** – in huge battles, **இகல்** – enmity, **மொய்ம்பினோர்** – men with strong bodies, **கல் எறியும் கவண் வெரீஇ** – fearing the stones shot by slingshots, **புள்** – birds, **இரியும்** – move away, flee, **புகர்ப் போந்தை** – palmyra palms with spots

## காவிரிப்பூம்பட்டினத்தில் உள்ள ஒரு குடியிருப்பு

**பறழ்ப் பன்றி பல் கோழி**
**உறைக் கிணற்றுப் புறச்சேரி**
**ஏழகத் தகரொடு சிவல் விளையாட** (75-77)

## A Community in Kāviripoompattinam

In a city neighborhood with ring wells, pigs with piglets, various kinds of fowl and rams along with partridges, play together.

**Notes:** **பொ. வே. சோமசுந்தரனார் உரை – சேரிப்புறம் என்பது புறஞ்சேரி என்று முன் பின்னாக மாறி நின்றது.**

**Meanings:** **பறழ்ப் பன்றி** – pigs with piglets, **பல் கோழி** – different kinds of fowl, **உறைக் கிணற்று** – with ring wells, **புறஞ்சேரி** – neighborhood in the city, neighborhood near the city (**சேரிப்புறம்** – **புறஞ்சேரி என்று முன் பின்னாக மாறி நின்றது** according to Po. Ve. Somasundaranar's commentary), **ஏழகத் தகரொடு** – with rams, male goats, male sheep, **சிவல்** – **கவுதாரி**, partridge, **விளையாட**- played

## பரதவர்களின் இருப்பிடம்

**கிடுகு நிரைத்து எஃகு ஊன்றி**
**நடுகல்லின் அரண் போல**
**நெடும் தூண்டிலின் காழ்**
**சேர்த்திய குறுங்கூரை குடி நாப்பண்**
**நிலவு அடைந்த இருள் போல**
**வலை உணங்கும் மணல் முன்றில்** (78-83)

### Where Fishermen Live

In the settlement where fishermen live, small-roofed huts surrounded by long fishing rods resting on them appear like memorial stones surrounded by spears stuck in the ground with rows of shields hanging on them.

The front yards with fishing nets drying in the sand appear like the moon and its dark spots.

**Notes:** **பட்டினப்பாலை** 78 – **கிடுகு நிரைத்து எஃகு ஊன்றி நடுகல்லின் அரண் போல**, **பட்டினப்பாலை** 167 – **காழ் ஊன்றிய கவி கிடுகின்**,

முல்லைப்பாட்டு 41 – பூந்தலைக் குந்தம் குத்தி கிடுகு நிரைத்து, பெரும்பாணாற்றுப்படை 119-120 – எஃகம் வடிமணிப் பலகையொடு நிரைஇ. அகநானூறு 20 – நிலவு மணல், அகநானூறு 200 – நிலாவின் இலங்கு மணல் மலி மறுகில், நற்றிணை 31 – நிலவு மணல், நற்றிணை 140 – நிலவு மணல், நற்றிணை 159 – நிலவுக் குவித்தன்ன மோட்டு மணல், நற்றிணை 183 – நிலவு மணல், குறுந்தொகை 123 – நிலவுக் குவித்தன்ன வெண் மணல், கலித்தொகை 13 – வாள் நிலா ஏய்க்கும் வயங்கு ஒளி எக்கர், புறநானூறு 17 – நிலவு மணல் வியன் கானல், பொருநராற்றுப்படை 213 – நிலவு எக்கர், மதுரைக்காஞ்சி 114 – நிலவுக் கானல், பட்டினப்பாலை 82-83 – நிலவு அடைந்த இருள் போல வலை உணங்கும் மணல் முன்றில்.

**Meanings:** கிடுகு நிரைத்து – placing shields in rows, எஃகு ஊன்றி – planted spears on the ground, நடுகல்லின் – like memorial stones, அரண் – protection, fences, போல – like, நெடும் தூண்டிலின் காழ் சேர்த்திய – with the long fishing rods resting, குறுங்கூரை – small roofs, குடி நாப்பண் – in the middle of a settlement, நிலவு அடைந்த இருள் – like the darkness in the moon, வலை உணங்கும் – nets are left to dry, மணல் முன்றில் – on the sand in the front yards

## பரதவர்களின் வழிபாடும் விளையாட்டும்

வீழ்த் தாழைத் தாள் தாழ்ந்த
வெண் கூதாளத்துத் தண் பூங்கோதையர்
சினைச் சுறவின் கோடு நட்டு
மனை சேர்த்திய வல் அணங்கினான்
மடல் தாழை மலர் மலைந்தும்
பிணர்ப் பெண்ணைப் பிழி மாந்தியும்
புன் தலை இரும் பரதவர்
பைந்தழை மா மகளிரொடு
பாய் இரும் பனிக்கடல் வேட்டம் செல்லாது
உவவு மடிந்து உண்டு ஆடியும் (84-93)

### Fishermen Worship the Ocean God

Fishermen wear garlands braided
with flowers the of white *koothalam*
plants growing at the bases of *thālai*
trees with aerial roots.

They plant horns of pregnant sharks,
pray to the powerful god, wear *thālai*
flowers and drink palmyra palm liquor
that were offered to their god.

Instead of going to fish in the vast, cold
ocean during full moon, the dark
fishermen with dry hair, eat desired food
and play with their dark-skinned women
wearing wearing fresh leaf garments.

**Means:** **வீழ்** – hanging low, having aerial roots, **தாழை** – *thālai* trees, **தாள்** – stems, **தாள் தாழ்ந்த** – base part, **வெண் கூதாளத்து** – of white *koothalam* flowers, convolvulus ipome, a three-lobed nightshade vine, **தண் பூங்கோதையர்** – those wearing the cool flower garlands, **சினைச் சுறவின்** – of pregnant horned sharks, of pregnant swordfish, **கோடு நட்டு** – they plant the horns, **மனை சேர்த்திய** – in the house, **வல் அணங்கினான்** – for the powerful god, Varunan, **மடல் தாழை** – *thālai* trees with fronds, Pandanus odoratissimus, **மலர் மலைந்தும்** – wearing the flowers, **பிணர்** – scaly, **பெண்ணை** – female palmyra palm trees, **பிழி மாந்தியும்** – drinking liquor, **புன் தலை** – head with parched hair, **இரும் பரதவர்** – dark fishermen, big fishermen, **பைந்தழை** – green leaves, fresh leaves, **மா மகளிரொடு** – with their dark women, **பாய் இரும் பனிக்கடல்** – spread dark cold ocean, **வேட்டம் செல்லாது** – not going to fish, **உவவு** – full moon day, **மடிந்து** – not doing their work, **உண்டு ஆடியும்** – ate and danced

## புகார்முகத்தில்

**புலவு மணல் பூங்கானல்**
**மா மலை அணைந்த கொண்மூ போலவும்**,
**தாய் முலை தழுவிய குழவி போலவும்**
**தேறு நீர்ப் புணரியோடு யாறு தலைமணக்கும்**
**மலி ஓதத்து ஒலி கூடல்**
**தீது நீங்க கடலால் ஆடியும்**

**மாசு போக புனல் படிந்தும்**
**அலவன் ஆட்டியும் உரவுத் திரை உழக்கியும்**
**பாவை சூழ்ந்தும் பல் பொறி மருண்டும்**
**அகலாக் காதலொடு பகல் விளையாடிப்**
**பெறற்கு அரும் தொல் சீர்த் துறக்கம் ஏய்க்கும்**
**பொய்யா மரபின் பூ மலி பெருந்துறை** (94-105)

### At the Kāviri Delta

At the Kāviri delta where the river water
mixes with the ocean, sand reeks of flesh,
and seaside groves are dense with flowers.

Like clouds that hug mountain summits
and infants who hug their mothers' breasts,
Kāviri joins the ocean with clear water,
where roaring wave sounds can be heard.

People swim and play in the ocean
to remove evil, and then jump into
the river, to remove the salt on their skin.

They play with crabs in the waves, make
sand dolls on the shores, and enjoy with
all their senses.

They spend their entire day there, without
reduced passion.

The vast shores of Kāviripoompattinam are
filled with flowers. Its ancient splendor
with unfailing tradition resembles heaven.

**Meanings:** **புலவு மணல்** – sand with flesh stink, **பூங்கானல்** – seashore grove with flowers, **மா மலை அணைந்த** – hugging the tall mountains, hugging the dark mountains, **கொண்மூப் போலவும்** – like the clouds, **தாய் முலை தழுவிய குழவி போலவும்** – like a child hugging its mother's breast, **தேறு நீர்** – clear water, **புணரியோடு** – with the ocean, **யாறு தலைமணக்கும்** – where the river (Kāviri) joins (**புகார் முகத்தே**), **மலி ஓதத்து** – with abundant waves, **ஒலி கூடல்** – loud where the ocean and river meet, **தீது நீங்க** – to remove evil, **கடலாடியும்** – played in the

ocean, **மாசு போக** – to remove the salt from their ocean bathing, **புனல் படிந்தும்** – bathed in the river, **அலவன் ஆட்டியும்** – played with crabs, **உரவுத் திரை உழக்கியும்** – played in the strong waves, **பாவை சூழ்ந்தும்** – made sand dolls, **பல் பொறி மருண்டும்** – enjoyed with all the senses, **அகலாக் காதலொடு** – with love that does not leave, **பகல் விளையாடி** – play during the daytime, **பெறற்கு அரும்** – difficult to obtain, **தொல் சீர்** – ancient splendor, ancient prosperity, **துறக்கம் ஏய்க்கும்** – like heaven, **பொய்யா மரபின்** – with an unfailing tradition, **பூ மலி பெருந்துறை** – Kāviripoompattinam shores with abundant flowers

### காவிரிப் பூம்பட்டினத்து இரவு நேர நிகழ்வுகள்

**துணைப் புணர்ந்த மட மங்கையர்**
**பட்டு நீக்கித் துகில் உடுத்தும்**
**மட்டு நீக்கி மது மகிழ்ந்தும்**
**மைந்தர் கண்ணி மகளிர் சூடவும்**
**மகளிர் கோதை மைந்தர் மலையவும்**
**நெடுங்கால் மாடத்து ஒள் எரி நோக்கிக்**
**கொடுந்திமில் பரதவர் குருஉச்சுடர் எண்ணவும்**
**பாடல் ஓர்ந்தும் நாடகம் நயந்தும்**
**வெண் நிலவின் பயன் துய்த்தும்**
**கண் அடைஇய கடைக் கங்குலான்** (106- 115)

**The Night Events**

Delicate women who unite with their husbands wear cotton instead of silk and drink wine instead of toddy.

Men wear women’s garlands and women wear men’s garlands.

Fishermen plying curved boats count the bright lights in the mansions with tall pillars.

People listen to songs, watch plays and enjoy the white moon’s benefits, as they go to sleep in the last phase of night.

**Notes:** **பட்டு நீக்கித் துகில் உடுத்தும்** (107-108) – **நச்சினார்க்கினியர் உரை** – **பட்டுடுத்தவற்றை நீக்கிப் புணர்ச்சி காலத்திற்கு நொய்யவாகிய வெள்ளியவற்றை உடுத்தும்**, **கள்ளுண்டலைக் கைவிட்டு காமபானத்தை உண்டு மகிழ்ந்தும்**. **பரிபாடல்** 20-21 – **மகளிர் கோதை மைந்தர் புனையவும் மைந்தர் தண் தார் மகளிர் பெய்யவும்**.

**Meanings:** **துணைப் புணர்ந்த** – united with their husbands, **மட மங்கையர்** – delicate women, young women, **பட்டு நீக்கி** – removed silk clothing, **துகில் உடுத்து** – wore cotton clothes, wore white clothes, **மட்டு நீக்கி** – removed toddy, removing hard liquor, **மது மகிழ்ந்து** – drank wine, **மைந்தர் கண்ணி மகளிர் சூடவும்** – women wore garlands that men wear, **மகளிர் கோதை மைந்தர் மலையவும்** – men wore garlands that women wear, **நெடுங்கால்** – tall columns, **மாடத்து** – of the mansions, **ஒள் எரி நோக்கி எண்ணவும்** – looking at the bright flames and counting the lights, **கொடுந்திமில் பரதவர்** – the fishermen plying curved boats, **பாடல் ஓர்ந்தும்** – listening to songs, **நாடகம் நயந்தும்** – enjoying dramas, **வெண் நிலவின் பயன் துய்த்தும்** – enjoying the benefits of the white moon, **கண் அடைஇய** – time for the eyes to sleep, **கடைக் கங்குலான்** – in the last phase of the night

## வரி வசூலிப்போர்

**மாஅ காவிரி மணம் கூட்டும்**
**தூஉ எக்கர்த் துயில் மடிந்து**
**வால் இணர் மடல் தாழை**
**வேலாழி வியன் தெருவில்**
**நல் இறைவன் பொருள் காக்கும்**
**தொல் இசைத் தொழில் மாக்கள்**
**காய் சினத்த கதிர்ச் செல்வன்**
**தேர் பூண்ட மாஅ போல**
**வைகல் தொறும் அசைவு இன்றி**
**உல்கு செயக் குறைபடாது** (116-125)

### The Tax Collectors

Tax collectors sleep on the pure,
flower-fragrant sandy banks of the wide Kāviri
and protect their fine king’s goods on the big
streets near the seashore filled with *thālai*
trees with fragrant, white clusters of flowers.

They work every day without idling or taking
breaks, like the horses tied to the chariot of the
scorching sun with rays, and collect taxes.

**Meanings:** **மாஅ காவிரி** – huge Kāviri, wide Kāviri, **மணம் கூட்டும்** – fragrant with flowers, **தூஉ எக்கர்** – pure sand, **துயில் மடிந்து** – sleeping, **வால் இணர்** – white flower bunches, **மடல் தாழை** – *thālai* trees with fronds, Pandanus odoratissimus,, **வேலா** – shore, **ஆழி** – ocean, **வியன் தெருவில்** – on the wide streets, **நல் இறைவன்** – the fine king, **பொருள் காக்கும்** – protect (his) assets, **தொல் இசை** – ancient fame, respected, **தொழில் மாக்கள்** – those who know their work (tax collectors), **காய் சினத்த** – very hot, **கதிர்ச் செல்வன்** – sun’s rays, **தேர் பூண்ட** – tied to the chariot, **மாஅ போல** – like horses, **வைகல் தொறும்** – every day, **அசைவு இன்றி** – without being lazy, **உல்கு செய** – to collect tax, **குறைபடாது** – without reducing

## பண்டகசாலை முன்றில்

**வான் முகந்த நீர் மலைப் பொழியவும்
மலைப் பொழிந்த நீர் கடல் பரப்பவும்
மாரி பெய்யும் பருவம் போல
நீரினின்றும் நிலத்து ஏற்றவும்
நிலத்தினின்று நீர்ப் பரப்பவும்
அளந்து அறியா பல பண்டம்
வரம்பு அறியாமை வந்து ஈண்டி
அருங்கடி பெருங்காப்பின்
வலிவுடை வல் அணங்கினோன்
புலி பொறித்து புறம் போக்கி
மதி நிறைந்த மலி பண்டம்
பொதிமூடைப் போர் ஏறி
மழை ஆடு சிமைய மால் வரைக் கவாஅன்
வரை ஆடு வருடைத் தோற்றம் போலக்**

**கூர் உகிர் ஞமலிக் கொடுந் தாள் ஏற்றை**
**ஏழகத் தகரோடு உகளும் முன்றில்** (126-141)

**In Front of the Warehouses**

Like the monsoon season when clouds
absorb ocean waters and come down as
rains on mountains, limitless goods
for export come from inland and
imported goods arrive in ships.

Fierce, powerful tax collectors are
at the warehouses collecting taxes and
stamping the Chōla tiger symbols on
goods that are to be exported.

Warehouses are filled with unlimited
expensive items packed in sacks.  They
lay heaped in the front yard.

In the front yard of a warehouse,
sharp-clawed male dogs with curved
legs play with rams on a sack heap,
appearing like mountain goats on tall
mountains hugged by clouds.

**Meanings:** **வான் முகந்த நீர்** – the water that is absorbed by the clouds, **மலை பொழியவும்** – come down (as rains) on the mountains, **மலை பொழிந்த நீர்** – the rain that fell on the mountains, **கடல் பரப்பவும்** – join the ocean, spread to the ocean (through rivers), **மாரி பெய்யும் பருவம் போல** – like the season when the rain falls, **நீரினின்றும் நிலத்து ஏற்றவும்** – from the sea to the land (imports), **நிலத்தினின்று நீர்ப் பரப்பவும்** – from the land to the sea (exports), **அளந்து அறியா** – unable to measure, **பல் பண்டம்** – lots of things, **வரம்பு அறியாமை** – without limits, **வந்து ஈண்டி** – has come and filled up, **அருங்கடி** – well protected, hard to obtain, **பெருங்காப்பின்** – (warehouses) with heavy protection, **வலியுடை** – with strength, **வல் அணங்கினோன்** – fierce men, **புலிப் பொறித்து புறம் போக்கி** – put the Chōla kingdom tiger symbol on the things and placed, **மதி நிறைந்த** – filled with expensive items, **மலி பண்டம்** – many different kinds of goods, **பொதி மூடை** – tied sacks, packed sacks, **போர் ஏறி** – climbed on the heaps, **மழை ஆடு** – clouds playing,

**சிமய** – mountain top, **மால் வரை** – tall mountain, mountain with bamboo, **கவாஅன்** – nearby mountain range, **வரை ஆடு** – playing on the mountains, **வருடை** – mountain goats, **தோற்றம்** – appearance, **போல** – like, **கூர் உகிர் ஞமலி** – dogs with sharp claws, **கொடும் தாள்** – curved legs, **ஏற்றை** – male dogs, **ஏழகத் தகரோடு** – with rams, with male sheep, **உகளும்** – they romp around, **முன்றில்** – in the front of the warehouse

## மாளிகைகள்

**குறுந்தொடை நெடும் படிக்கால்**
**கொடும் திண்ணைப் பல் தகைப்பின்**
**புழை வாயில் போகு இடை கழி**
**மழை தோயும் உயர் மாடத்துச்** (142 – 145)

### Mansions

The tall mansions that reach to the skies touching the clouds have huge circular verandas with many short-stepped, tall stairs. The entry to the interior is high with many walls and small gates.

**Meanings:** **குறுந்தொடை** – steps placed close to each other, **நெடும் படிக்கால்** – tall ladders, tall stairs, **கொடுந்திண்ணை** – curved verandas, **பல் தகைப்பின்** – with many walls, with many rooms, **புழை** – small entrances, small gates, **வாயில்** – big doors, **போகு இடை கழி** – long entry ways, **மழை தோயும்** – touching the clouds, **உயர் மாடத்து** – in the tall mansions with upper levels

## விழா நீங்காத கடை வீதி

**சேவடிச் செறி குறங்கின்**
**பாசிழைப் பகட்டு அல்குல்**
**தூசு உடைத் துகிர் மேனி**
**மயில் இயல் மான் நோக்கின்**
**கிளி மழலை மென் சாயலோர்**
**வளி நுழையும் வாய் பொருந்தி**

**ஓங்கு வரை மருங்கின் நுண் தாது உறைக்கும்
காந்தள் அம் துடுப்பின் கவி குலை அன்ன
செறி தொடி முன் கை கூப்பிச் செவ்வேள்
வெறியாடு மகளிரொடு செறியத் தாஅய்க்
குழல் அகவ யாழ் முரல
முழவு அதிர முரசு இயம்ப
விழவு அறா வியல் ஆவணத்து** (146- 158)

**Busy Streets with Festivities**

In the upper floors of mansions,
women with pretty feet, close thighs,
wide loins, coral-like bodies covered
with fine clothing, delicate appearances
like peacocks, deer-like bewildered
glances and parrot-like sweet language,
wear new jewels, and stand near doors
through which breezes blow.

Their stacks of bangles are like the
beautiful petals of drooping clusters
of glory lily blossoms that drop fine
pollen in the tall mountains.

With lifted forearms and joined palms,
they look down at the streets below and
pray to Murukan. *Veriyāttam* ritual
dances are performed on the streets by
dancing girls who sing and dance to the
music of flutes and lutes, and to the roars
of large *mulavu* drums *murasu* drums.

There are endless festivities on the wide
streets of Kāviripoompattinam.

**Meanings:** **சேவடி** – red feet, perfect feet, **செறி குறங்கின்** – with tight thighs, **பாசிழை** – new jewels, **பகட்டு அல்குல்** – wide loins, large loins, **தூசு உடை** – fine clothing, cotton clothing, **துகிர் மேனி** – coral-like body, **மயில் இயல்** – peacock nature, **மான் நோக்கு** – glances like that of deer, **கிளி மழலை** – delicate talk like parrots, **மென் சாயலோர்** – those of delicate nature, the delicate women, **வளி நுழையும் வாய்** – breeze entering ways, **பொருந்தி** – being near, **ஓங்கு வரை மருங்கின்** – in

the tall mountains, **நுண் தாது** – fine pollen, **உறைக்கும்** – dropping, **காந்தள்** – glory lilies, **அம் துடுப்பின்** – like the beautiful petals, **கவி** – bent, curved, **குலை அன்ன** – like clusters, **செறி தொடி** – stacks of bangles, rows of bangles, **முன் கை கூப்பி** – clasping forearms together, **செவ்வேள்** – Murukan, **வெறியாடல்** – *veriyāttam* ritual, **மகளிரொடு செறிய** – together with the women, **குழல் அகவ** – flutes create music, **யாழ் முரல** – lutes create music, **முழவு அதிர** – *mulavu* drums roar, **முரசு இயம்ப** – *murasu* drums roar, **விழவு அறா** – continuous festivals, **வியல் ஆவணத்து** – in the wide streets with shops

## பல்வேறு கொடிகள்

**Many different flags**

## தெய்வக்கொடி

**மையறு சிறப்பின் தெய்வம் சேர்த்திய**
**மலர் அணி வாயில் பலர் தொழு கொடியும்** (159-160)

**Flags at a temple**

At a temple with a faultless, great god, there are
flags adored by many near the entrance decorated
with flowers.

**Meanings:** **மை அறு சிறப்பின்** – with faultless splendor, with flawless greatness, **தெய்வம் சேர்த்திய** – where a god resided, **மலர் அணி வாயில்** – entrance decorated with flowers, **பலர் தொழு கொடியும்** – flags adored by many

## வீரர்களை வணங்குமிடத்தில் ஏற்றியுள்ள கொடி

**வருபுனல் தந்த வெண்மணல் கான் யாற்று**
**உருகெழு கரும்பின் ஒண்பூப் போலக்**
**கூழுடை கொழு மஞ்சிகை**
**தாழுடைத் தண் பணியத்து**
**வால் அரிசிப் பலி சிதறிப்**
**பாகு உகுத்த பசு மெழுக்கின்**

**காழ் ஊன்றிய கவி கிடுகின்**
**மேல் ஊன்றிய துகில் கொடியும்** (161- 168)

### Flags Where Warriors are Worshipped

Sandal paste is spread on the floor,
spears are planted on the ground, and shields
turned upside down are hung on them.

Warriors who fell in battle are worshipped
with many baskets of cooked food placed
on fabric spread on the ground on which
white rice and flowers are strewn as offerings.

Above these are flags made of cloth, appearing
like bright, beautiful sugarcane flowers that
bloom on the shores of forest streams with
white sand brought by flowing waters.

**Notes:** **பாகு உகுத்த பசு மெழுக்கின் (166)** – **பொ. வே. சோமசுந்தரனார் உரை** – **சந்தனக் குழம்பினைக் கொட்டி மெழுகிய பசிய மெழுக்கு நிலத்தின் மேல்**, **வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரி உரை** – **பாகு போலக் காய்ச்சி வார்த்த பசிய மெழுக்கைப் பூசிய**, **நச்சினார்க்கினியர் உரை** – **உகுத்த பாகு என்பது கண்டு சர்க்கரைக் கட்டுப்பாகினை**, **இதனை பசு மெழுக்கென்பதனோடு கூட்டி ஆப்பி** (**பசுவின் சாணி**) **என்பாருமுளர்**. **பட்டினப்பாலை** 78 – **கிடுகு நிரைத்து எஃகு ஊன்றி நடுகல்லின் அரண் போல**, **பட்டினப்பாலை** 167 – **காழ் ஊன்றிய கவி கிடுகின்**, **முல்லைப்பாட்டு** 41 – **பூந்தலைக் குந்தம் குத்தி கிடுகு நிரைத்து**, **பெரும்பாணாற்றுப்படை** 119-120 – **எஃகம் வடிமணிப் பலகையொடு நிரைஇ**.

**Meanings:** **வருபுனல்** – flowing water, stream, **தந்த வெண் மணல்** – white sand that it brought, **கான் யாற்று** – of a forest stream, **உருகெழு** – beauty filled, lovely, **கரும்பின்** – of sugarcanes, **ஒண் பூப் போல** – like the bright flowers, **கூழுடை** – with cooked food, **கொழு மஞ்சிகை** – big baskets, **தாழ் உடை** – cloth that is spread

down, **தண் பணியத்து** – with cool foods, **வால் அரிசி** – white rice, **பலி சிதறி** – scattered as offering, gave as offering, **பாகு உகுத்த** – sandal paste poured, mud paste poured, **பசு மெழுக்கின்** – on the new plaster on the floor, on the cow dung spread on the floor, **காழ் ஊன்றிய** – spears that were planted, **கவி கிடுகின்** – on the shields that are turned upside down, **மேலூன்றிய** – placed above that, **துகிற் கொடியும்** – also flags made of cloth

## பல் துறை சான்றோர் வாதிடும் இடத்திலுள்ள கொடி

**பல் கேள்வி துறை போகிய**
**தொல் ஆணை நல்லாசிரியர்**
**உறழ் குறித்து எடுத்த உருகெழு கொடியும்** (169-171)

### Flags where the Wise Debate

Lovely colorful flags are flown, where
wise scholars who have gained knowledge
in many fields according to established
traditions, debate.

**Meanings:** **பல் கேள்வி** – knowledge in many fields, **துறை போகிய** – in many fields, **தொல்** – ancient, **ஆணை** – command, order, **நல் ஆசிரியர்** – fine teachers, fine scholars, **உறழ் குறித்து** – opposing, arguing, **எடுத்த** – raised, **உருகெழு கொடியும்** – also flags of fine color, also fierce flags

## கப்பலின் மேலேற்றப்பட்டுள்ள கொடிகள்

**வெளில் இளக்கும் களிறு போலத்**
**தீம் புகார்த் திரை முன் துறைத்**
**தூங்கு நாவாய் துவன்று இருக்கை**
**மிசைக் கூம்பின் நசைக் கொடியும்** (172-175)

### Flags Hoisted on Ships

In the sweet Puhār harbor, desirable
flags are hoisted on masts of ships
gently swaying on the waves, anchored
and appearing like male elephants that
sway their sturdy posts.

**Meanings:** **வெளில் இளக்கும் களிறு போல** – like male elephants that sway the posts to which they are tied, **தீம் புகார்** – sweet Puhār city, **திரை முன் துறை** – shore where the waves break, **தூங்கு நாவாய்** – swaying ships, **துவன்று இருக்கை** – were together in their place, **மிசை** – above, **கூம்பின்** – on the masts, **நசைக் கொடி** – desirable flags

### கள் விற்கும் முன்றிலிலுள்ள கொடி

**மீன் தடிந்து விடக்கு அறுத்து**
**ஊன் பொரிக்கும் ஒலி முன்றில்**
**மணல் குவைஇ மலர் சிதறிப்**
**பலர் புகு மனைப் பலிப் புதவின்**
**நறவு நொடைக் கொடியோடு** (176-180)

**Flags Hoisted in the Liquor Shops**

Sizzling sounds of frying pieces
of fish and meat are heard in the
front yards of liquor shops. Sand
is heaped where rituals are performed
with strewn flowers. In these shops
frequented by many, liquor is sold,
and there are many flags at the entrance.

**Meanings:** **மீன் தடிந்து** – chopped fish, **விடக்கு** – meat, **அறுத்து** – chopped, **ஊன்** – flesh, **பொரிக்கும்** – frying, **ஒலி** – sounds, **முன்றில்** – in the front yards, **மணல் குவைஇ** – sand heaps, **மலர் சிதறி** – flowers are scattered, **பலர் புகு மனை** – houses where many enter for alcohol, shops where many enter for alcohol, **பலிப் புதவின்** – at the entrance of places where rituals are performed, **நறவு நொடை** – alcohol is sold, **கொடியோடு** – with flags

### பல் கொடி விளங்கும் பட்டினம்

**பிற பிறவும் நனி விரைஇ**
**பல் வேறு உருவின் பதாகை நீழல்**
**செல் கதிர் நுழையாச் செழு நகர்** (181-183)

**City with Many Flags**

There are flags of many shapes
in many places where different things
are sold, blocking the sun's moving
rays in the prosperous city.

**Notes:** **நச்சினார்க்கினியர் உரை** – **கள்ளின் விலைக்குக் கட்டின கொடியோடே ஏனையவற்றிற்குக் கட்டின கொடிகளும் மிகக் கலக்கையினாலே செல்கதிர் நுழையா என்க**.

**Meanings:** **பிற பிறவும்** – many more, others, **நனி** – lot, **விரைஇ** – close together, **பல் வேறு உருவின்** – in many different shapes, **பதாகை நீழல்** – shade of the big flags, **செல் கதிர்** – moving rays (of the sun), **நுழையா** – unable to enter, **செழு நகர்** – prosperous city

**பூம்புகாரின் செல்வ வளம் நிறைந்த வீதிகள்**

….**வரைப்பின்**
**செல்லா நல்லிசை அமரர் காப்பின்**
**நீரின் வந்த நிமிர் பரிப் புரவியும்**
**காலின் வந்த கருங்கறி மூடையும்**
**வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்**
**குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்**
**தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்**
**கங்கை வாரியும் காவிரிப் பயனும்**
**ஈழத்து உணவும் காழகத்து ஆக்கமும்**
**அரியவும் பெரியவும் நெரிய ஈண்டி**
**வளம் தலை மயங்கிய நனந்தலை மறுகின்** (183-193)

**Rich Streets of Kāviripoompattinam**

The borders of the city with great fame
are protected by the celestials. Swift
horses with lifted heads arrive on ships
from abroad, sacks of black pepper arrive
from inland by wagons, gold comes from
northern mountains, sandalwood and *akil*

wood come from the western mountains,
and materials come from the Ganges.

The yields of river Kāviri, food items from
Eelam, products made in Burma, and many
rare and big things are piled up together on
the wide streets, bending the land under.

**Notes: ஈழத்து உணவும் (191)** – **பொ. வே. சோமசுந்தரனார் உரை: ஈழத்துணவும் என்பது ஈழத்துளவும் என்றே இருத்தல் வேண்டும். ஈழத்துணவும் என்னுந் தொடர்க்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் உரையும் இல்லாததால் பிற்காலத்தார் அங்ஙனம் பிறழக்கொண்டமைக்குக் காரணமாகலாம். காலின் வந்த கருங்கறி மூடையும் (186)** – **நச்சினார்க்கினியர் உரை** – **கடலிலே காற்றால் வந்த கரிய மிளகுப் பொதிகளும், பொ. வே. சோமசுந்தரனார் உரை** – **நிலத்தின்கண் சகடங்களிலே வந்த கரிய மிளகு பொதிகளும், வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரி உரை** – **வண்டியின் மூலமாக வந்த கரு நிற மிளகு மூட்டையும். வை. மு. கோ மேலும் விளக்குகின்றார்** – **கால் என்பது உருளையையுடைய வண்டிக்கு ஆகுபெயர்.**

**Meanings: வரைப்பின்** – at the boundaries of the city, **செல்லா** – not ruined, **நல் இசை** – fine fame, **அமரர் காப்பின்** – protected by celestials, **நீரின் வந்த** – came on water, came by ships, **நிமிர் பரி** – lifted (head) and fast, **புரவியும்** – horses, **காலின் வந்த** – came through wagons, came through canals, **கருங்கறி மூடையும்** – black pepper sacks, **வட மலைப் பிறந்த** – born in the northern mountains, **பொன்னும்** – gold, **குடமலைப் பிறந்த** – came from the western mountains, **ஆரமும்** – and sandalwood, **அகிலும்** – and *akil* wood, eaglewood, **கங்கை வாரியும்** – and produce/things from the Ganges, **காவிரிப் பயனும்** – yields of river Kāviri, **ஈழத்து உணவும்** – and food from Eelam, **காழகத்து ஆக்கமும்** – and products created in Myanmar, Burma, **அரியனவும்** – and rare things, **பெரியவும்** – big ones and, **நெரிய** – densely, breaking the land, **ஈண்டி** – heaped, **மயங்கிய** – together, **நனந்தலை** – wide space, **மறுகின்** – on the streets

## காவிரிப்பூம்பட்டினத்து உழவர்களின் நல் இயல்புகள்

**நீர் நாப்பண்ணும் நிலத்தின் மேலும்**
**ஏமாப்ப இனிது துஞ்சிக்**
**கிளை கலித்துப் பகை பேணாது**
**வலைஞர் முன்றில் மீன் பிறழவும்**
**விலைஞர் குரம்பை மா ஈண்டவும்**
**கொலை கடிந்தும் களவு நீக்கியும்**
**அமரர் பேணியும் ஆவுதி அருத்தியும்**
**நல் ஆனொடு பகடு ஓம்பியும்**
**நான்மறையோர் புகழ் பரப்பியும்**
**பண்ணியம் அட்டியும் பசும் பதம் கொடுத்தும்**
**புண்ணியம் முட்டா தண்ணிழல் வாழ்க்கைக்**
**கொடும் மேழி நசை உழவர்** (194- 205)

**Farmers, Fishermen and Meat sellers**

Animals that live in water and on land
sleep sweetly, live without fear of enmity
and multiply in numbers.

Abundant fish leap and play in ponds in
the front yards of houses of fishermen.
Animals run around in the huts
of meat sellers. There is no malice,
murder, or robbery among the people.

Farmers with curved plows praise the
celestials, give fresh and cooked food as
charity, and perform rituals. They take
care of their fine cows and bulls and spread
the fame of those who recite the four Vedas.

**Meanings:** **நீர் நாப்பண்ணும்** – in the middle of the water, **நிலத்தின் மேலும்** – and on the land, **ஏமாப்ப** – happily, **இனிது** – sweetly, **துஞ்சி** – slept, **கிளை கலித்து** – increased the group, **பகை பேணாது** – without considering enmity, **வலைஞர்** – fishermen who work with nets, **முன்றில்** – front yards, **மீன் பிறழவும்** – fish roll in abundance, fish leap in abundance, **விலைஞர்** – those who sell meat, **குரம்பை** – huts, **மா ஈண்டவும்** – have collection of many animals, **கொலை கடிந்தும்** – and removing murders, **களவு நீக்கியும்** – and removing robberies, **அமரர் பேணியும்** – and praising

the celestials, **ஆவுதி அருத்தியும்** – and doing the rituals and eating the ritual food, **நல் ஆனொடு** – along with fine cows, **பகடு** – bulls, **ஓம்பியும்** – protecting, **நான்மறையோர்** – those who recite the four Vedas, brahmins, **புகழ் பரப்பியும்** – spreading their fame, **பண்ணியம் அட்டியும்** – and cooking food, **பசும் பதம் கொடுத்தும்** – and giving uncooked raw food, **புண்ணியம்** – just manner, charitable acts, **முட்டா** – not reduced, **தண் நிழல்** – cool shade, **வாழ்க்கை** – life, **கொடும் மேழி** – curved plough, **நசை உழவர்** – desiring farmers

## வணிகர் குடிச்சிறப்பு

**நெடு நுகத்துப் பகல் போல**
**நடுவு நின்ற நல் நெஞ்சினோர்**
**வடுஅஞ்சி வாய்மொழிந்து**
**தமவும் பிறவும் ஒப்ப நாடிக்**
**கொள்வதூஉம் மிகை கொடாது**

**கொடுப்பதூஉங் குறைகொடாது**
**பல் பண்டம் பகர்ந்து வீசும்**
**தொல் கொண்டி துவன்று இருக்கை** (206- 212)

### Splendor of Merchants

The houses of merchants who trade according to tradition are in Kāviripoompattinam. They have good hearts, live justly like the center of yokes and utter only truths. Afraid of blame, they trade well, respecting their goods and those of others. They do not take more when they buy and do not give less when they sell.

**Notes: நெடுநுகம் (206)** – **பொ. வே. சோமசுந்தரனார் உரை** – **கலப்பையில் எருதுகளைப் பிணைக்கும் நீண்ட தடி. இதனை நுகத்தடி எனவும் கூறுப. இத் தடியின் நடுவிடம் தெரிதற் பொருட்டு ஓர் ஆணி தைத்திருப்பர்.**

**Meanings:** **நெடு நுகத்து** – of a long shaft of a plough, **பகல் போல** – like the center of a yoke, **நடுவு நின்ற** – living with fairness, **நல் நெஞ்சினோர்** – people with good hearts, **வடு அஞ்சி** – afraid of blame, **வாய்மொழிந்து** – telling the truth, **தமவும் பிறவும்** – theirs and others, **ஒப்ப நாடி** – considering as equal, **கொள்வதூஉம்** – the things that they buy, **மிகை கொளாது** – not taking too much, **கொடுப்பதூஉம்** – what they give/sell, **குறை கொடாது** – not giving less while selling, **பல் பண்டம்** – many things, **பகர்ந்து** – telling the prices, **வீசும்** – they give, **தொல்** – ancient, **கொண்டி** – brought wealth, earned wealth, **துவன்று** – filled, **இருக்கை** – places

### பன்னாட்டினரும் இனிது உறையும் புகார்

**பல் ஆயமொடு பதி பழகி**
**வேறு வேறு உயர்ந்த முதுவாய் ஒக்கல்**
**சாறு அயர் மூதூர் சென்று தொக்காங்கு**
**மொழி பல பெருகிய பழி தீர் தேஎத்துப்**
**புலம் பெயர் மாக்கள் கலந்து இனிது உறையும்**
**முட்டாச் சிறப்பின் பட்டினம்** (213-218)

### People from Many Nations Live Together

People from many nations with various languages living together sweetly is like the festivals of an ancient city, celebrated together by enlightened people who have lived with many groups of people and have visited other faultless countries.

Kāviripoompattinam is a place with perfection and greatness.

**Notes:** **புலம் பெயர் மாக்கள்** (217) – **நச்சினார்க்கினியர் உரை** – **சோனகர்**, **சீனர் முதலியோர்**.

**Meanings:** **பல் ஆயமொடு** – with many groups of people, **பதி பழகி** – used to going and staying in many countries, **வேறு வேறு** – many different, **உயர்ந்த** – superior, **முதுவாய்** – with wisdom, **ஒக்கல்** – relatives, **சாறு அயர்** – celebrating festivals, **மூதூர்** – ancient city, **சென்று தொக்காங்கு** – like they gathered together, **பழி தீர்** –

without fault, **தேளத்து** – from countries, **மொழி பல பெருகிய** – many languages flourish, **புலம் பெயர் மாக்கள்** – people who have migrated from their own countries for trade, **கலந்து இனிது** – mingled with everybody, **உறையும்** – live, **முட்டாச் சிறப்பின்** – great without anything reduced, **பட்டினம்** – Kāviripoompattinam

## வாரேன் வாழிய நெஞ்சே!

……………………….**பெறினும்**
**வார் இருங் கூந்தல் வயங்கு இழை ஒழிய**
**வாரேன் வாழிய நெஞ்சே** (218- 220)

**The man who would not leave his beloved**

May you live long, my heart!
Even if this city were gifted to
me, I will not leave my girl with
long, black hair and blazing jewels.

**Meanings:** **பெறினும்** – even if I get (Kāviripoompattinam), **வார் இருங் கூந்தல்** – long black hair, **வயங்கு இழை** – the woman with bright jewels, **ஒழிய** – leaving, **வாழிய** – may you live long, **நெஞ்சே** – my heart, **வாரேன்** – I will not come

## திருமாவளவனின் பெருமைகள்
## திருமாவளவன் அரசுரிமை பெறல்

…………………….**கூர் உகிர்**
**கொடுவரிக் குருளைக் கூட்டுள் வளர்ந்தாங்குப்**
**பிறர் பிணியகத்து இருந்து பீடு காழ் முற்றி**
**அருங்கரை கவியக் குத்திக் குழிகொன்று**
**பெருங்கை யானை பிடிப் புக்காங்கு**
**நுண்ணிதின் உணர நாடி நண்ணார்**
**செறிவுடைத் திண் காப்பு ஏறி வாள் கழித்து**
**உரு கெழு தாயம் ஊழின் எய்தி** (220-227)

**Thirumāvalavan Regaining his Kingdom**

Thirumāvalavan was imprisoned by
enemies while young. He was like
a sharp-clawed, tiger cub with curved
stripes, that was raised in a cage.

He had a resolute mind. To gain
his rights to the throne, he escaped
by analyzing his enemy's strength,
scaled protected walls, used his sword
removed from its scabbard and won his
kingdom back, like a big trunked bull
elephant in heat that breaks and
collapses the banks of a trench,
to escape and unite with his mate.

**Meanings:** **கூர் உகிர்** – sharp claws, **கொடுவரி** – tiger, **குருளை** – tiger cub, **கூட்டுள்** – in a cage, **வளர்ந்தாங்கு** – like it grew up, **பிறர்** – enemies, **பிணி அகத்து இருந்து** – from their protection, **பீடு** – strength, **காழ்** – strong mind, **முற்றி** – increased, **அருங்கரை** – difficult bank, **கவிய** – to bend (to break and fall), **குத்தி** – gored (with tusks), **குழி கொன்று** – ruined the pit, **பெருங்கை யானை** – elephant with a long trunk, **பிடி புக்காங்கு** – like it unites with its female, like it joins its female, **நுண்ணிதின் உணர** – knowing by fine intelligence, **நாடி** – analyzed, **நண்ணார்** – enemies, **செறிவுடை**- close, tight, **திண் காப்பு ஏறி** – climbed on strongly protected walls, **வாள் கழித்து** – removed his sword from its scabbard, **உருகெழு தாயம்** – fierce rights to rule, **ஊழின்** – in the right manner, **எய்தி** – attained

## திருமாவளவனது போர்த்திறன்

**பெற்றவை மகிழ்தல் செய்யான் செய்றோர்**
**கடி அரண் தொலைத்த கதவு கொல் மருப்பின்**

முடி உடைக் கருந்தலை புரட்டும் முன் தாள்
உகிர் உடை அடிய ஓங்கு எழில் யானை
வடி மணிப் புரவியொடு வயவர் வீழப்
பெரு நல் வானத்துப் பருந்து உலாய் நடப்ப
தூறு இவர் துறுகல் போலப் போர் வேட்டு
வேறு பல் பூளையொடு உழிஞை சூடிப்
பேய்க் கண் அன்ன பிளிறு கடி முரசம்
மாக் கண் அகல் அறை அதிர்வன முழங்க
முனை கெடச் சென்று முன் சமம் முருக்கித்
தலைதவச் சென்று தண் பணை எடுப்பி (228- 239 )

**The King's Splendor**

Not satisfied by prying his rights
from enemies, he attacked their
protected forts, his tall handsome
elephants piercing and destroying
their gates with their tusks.
With their front legs with sharp
toe nails, they kicked and rolled
the crown-wearing black heads of
enemy kings on the ground.

He fought with his horses decorated
with cast bells, and ruined his enemy
soldiers in battlefields above which
kites soared in the wide, fine skies.

He surrounded enemy fortresses with
warriors who desired battles, donning
*poolai* and *ulignai* flowers
along with others, their appearances
like bushes spread on boulders.

His drums with clay eyes, looking like
eyes of ghouls, roared fiercely in battle
camps.  He waged wars against enemies,
ruined their fortresses and lands, and forced
farmers to move away from their cool fields.

**Notes:** **புரட்டும்** (230) – **பொ. வே. சோமசுந்தரனார் உரை – உதைத்து உருட்டும்**.

**Meanings:** **பெற்றவை** – his rights to rule that he got back, **மகிழ்தல் செய்யான்** – he was not happy with it, he was not content with it, **செற்றோர்** – enemies, **கடி அரண்** – forts with protection, **தொலைத்த** – ruined, **கதவு கொல்** – ruining the doors, **மருப்பின்** – with tusks, **முடி உடை கருந்தலை** – black heads with crowns, **புரட்டும்** – they kicked and rolled, they flicked, **முன் தாள்** – front legs, **உகிர் உடை அடிய** – with feet with claws, **ஓங்கு எழில் யானை** – tall beautiful elephant, **வடி மணி** – beautifully made bells, cast bells, ringing bells, **புரவியொடு** – with horses, **வயவர் வீழ** – enemy soldiers fell, **பெரு நல் வானத்துப் பருந்து உலாய் நடப்ப** – kites fly in the huge sky, **தூறு இவர்** – small bushes spread, **துறுகல் போல** – like boulders, **போர் வேட்டு** – desiring battles, **வேறு பல** – different kinds, **பூளையொடு**, wore *poolai* flowers, wool plant, Aerua javanica, **உழிஞை சூடி** – wore *ulignai* flowers, **கொற்றான்**, balloon vine, Cardiospermum halicacabum, **பேய்க் கண் அன்ன** – like the eyes of ghouls/spirits, **மாக் கண்** – huge clay eyes, **பிளிறு கடி முரசம்** – protected drums trumpeting, **அகல் அறை** – wide battle camp, **அதிர்வன முழங்க** – they roared loudly, **முனை கெட** – to ruin enemy lands (in battle), **சென்று** – went, **முன் சமம்** – in main battles, **முருக்கி** – ruined, **தலை** – forts (of enemies), **தவச் செல்லுதல்** – going much further, **தண் பணை** – cool fields, fine fields, **எடுப்பி** – removed them

## திருமாவளவன் உடற்றிய போரினால் மருத நில வளம் அழிதல்

**வெண் பூக் கரும்பொடு செந்நெல் நீடி**
**மா இதழ்க் குவளையொடு நெய்தலும் மயங்கி**
**கராஅம் கலித்த கண் அகன் பொய்கை**
**கொழுங்கால் புதவமொடு செருந்தி நீடிச்**
**செறுவும் வாவியும் மயங்கி நீர் அற்று**
**அறு கோட்டு இரலையொடு மான் பிணை உகளவும்** (240-245)

### Thirumāvalavan's Wars Ruined Fertile Enemy Lands

Before his attacks, his enemy countries
had sugarcane fields with white flowers
and rice fields with red paddy. Their

huge ponds had big-petaled, blue
waterlilies,
white waterlilies and arrogant crocodiles.

After he ruined them, thick-stemmed
*arukam* grass and long sedge grew,
intertwined.
Lakes and fields dried up.  Stags with striped
antlers pranced around with their females.

**Notes:** **அறு கோட்டு** (245) – Po. Ve. Somasundaranar interpets the words as **அறுப்புடைய** (**வரியுடைய**) **கொம்பு**.  Gazelles have striped antlers.  Scholars have also interpreted the words as 'broken antlers' in – **அகநானூறு** 147, 353, **நற்றிணை** 265.

**Meanings:** **வெண் பூக் கரும்பொடு** – with sugarcane with white flowers, **செந்நெல்** – red paddy, fine paddy, **நீடி** – growing tall, **மா இதழ்** – big/dark petals, **குவளையொடு** – with blue water lilies, **நெய்தலும் மயங்கி** – mixed with white waterlilies, **கராஅம்** – crocodiles (mistakenly interpreted as alligators), **கலித்த** – with arrogance, **கண் அகன் பொய்கை** – wide ponds, **கொழுங் கால்** – thick stems, **புதவமொடு** – with *arukam* grass, **அறுகம் புல்**, Cynodon grass, Cynodon dactylon, **செருந்தி நீடி** – long sedge, **வாட்கோரை**, **செறுவும்** – and fields, **வாவியும்** – and lakes, **மயங்கி** – mixed, **நீர் அற்று** – without water, **அறு கோட்டு** – with striped antlers, with broken antlers, **இரலை** – stags, male deer, **மான் பிணை** – female deer, **உகளவும்** – prance around

## கந்துடைப் பொதியிலின் நிலை

**கொண்டி மகளிர் உண் துறை மூழ்கி**
**அந்தி மாட்டிய நந்தா விளக்கின்**
**மலர் அணி மெழுக்கம் ஏறிப் பலர் தொழ**
**வம்பலர் சேக்கும் கந்துடைப் பொதியில்**
**பரு நிலை நெடுந்தூண் ஒல்கத் தீண்டிப்**
**பெரு நல் யானையொடு பிடி புணர்ந்து உறையவும்** (246-251)

### Temples have become stables in Enemy Countries

In the temples with thick door headers
where people came and prayed,

at twilight, women brought from enemy bathed in the drinking-water tanks, lit lamps that stayed lit all night, decorated the place with flowers and sealed the floor with cow dung,
huge, fine bull elephants, together with their females, are tied to thick, tall posts on which they rub, tilting them.

**Notes:** **கொண்டி மகளிர் (246)** – **பொ. வே. சோமசுந்தரனார் உரை** – **பிறர் நாட்டிலிருந்து கொள்ளையிட்டுக் கொணர்ந்த பெண்டிர்**.

**Meanings:** **கொண்டி மகளிர்** – women who were brought (from enemy nations after defeating their countries in battle), **உண் துறை மூழ்கி** – dived into the drinking water ports, bathed in the drinking water ports, **அந்தி** – twilight, **மாட்டிய** – lit, **நந்தா விளக்கின்** – with lamps where flames do not die down (**அவியாத விளக்குனுடைய**), **மலர் அணி** – decorated with flowers, **மெழுக்கம்** – place where the floor is sealed with cow dung, **ஏறி** – climb, **பலர் தொழ** – for many to pray, **வம்பலர்** – new people, **சேக்கும்** – stay, **கந்துடைப் பொதியில்** – in the common place where god resides, in the temples with poles, **பரு நிலை நெடுந் தூண்** – thick and tall columns, **ஒல்க** – to tilt, **தீண்டி** – rub, **பெரு நல் யானையொடு** – with big fine elephants, **பிடி புணர்ந்து** – together with their females, **உறையவும்** – live there

## விழா இன்றிக் கிடந்த பொது மன்றம்

**அரு விலை நறும் பூத் தூஉய்த் தெருவின்**
**முதுவாய்க் கோடியர் முழவொடு புணர்ந்த**
**திரி புரி நரம்பின் தீந்தொடை ஓர்க்கும்**
**பெரு விழாக் கழிந்த பேஎம் முதிர் மன்றத்துச்**
**சிறு பூ நெருஞ்சியோடு அறுகை பம்பி**
**அழல்வாய் ஓரி அஞ்சு வரக் கதிப்பவும்**
**அழு குரல் கூகையோடு ஆண்டலை விளப்பவும்**
**கணங்கொள் கூளியொடு கதுப்பு இகுத்து அசைஇப்**
**பிணம் தின் யாக்கைப் பேய் மகள் துவன்றவும்** (252- 260)

**Town Square with no Festivities in Enemy Countries**

There are no big festivals where once expensive fragrant flowers were strewn on the streets,
artists with ancient wisdom danced and sang, and sweet sounds of drums and lutes with tightly twisted strings were heard together in the common ground.

Instead, the place became desolate, thorny *nerunchi* bushes with small flowers and *arukam* grass had spread, foxes with fierce mouths howled causing fear, and the great owls and other owls hooted. Male ghouls and their corpse-eating, dancing females with hanging hair gathered together.

**Notes:** **அழல்வாய் ஓரி (257)** – **பொ. வே. சோமசுந்தரனார் உரை** – **கூவிளியுடைய** (**அழுகின்ற**) **நரிகள்**, **வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரி உரை** – **கொடிய வாய்களையுடைய நரிகள்**. **அசைஇ (259)** – **பொ. வே. சோமசுந்தரனார் உரை** – **ஆடி**, **வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரி உரை** – **இருந்து**.

**Meanings:** **அரு விலை நறும் பூ** – expensive fragrant flowers, **தூஉய்** – throw, **தெருவின்** – on the streets, **முதுவாய்** – ancient wisdom, **கோடியர்** – artists who dance and sing, **முழவொடு புணர்ந்த** – together with drums, **திரிபுரி நரம்பின்** – with tightly twisted strings, **தீந்தொடை** – sweet lute music, **ஓர்க்கும்** – listen, **பெரு விழா** – big festivals, big celebrations, **கழிந்த** – ended, **பேஎம் முதிர்** – very fierce and ancient, **மன்றத்து** – in the common grounds, **சிறு பூ நெருஞ்சியோடு** – with small *nerunchi* flowers, Cow's thorn, Tribulus terrestris linn, **அறுகை பம்பி** – cynodon grass has spread, **அழல்வாய் ஓரி** – foxes with a harsh mouths, foxes with loud mouths, **அஞ்சுவர** – to cause fear, **கதிர்ப்பவும்** – to howl, **அழு குரல் கூகையோடு** – with owls that hoot with crying sounds, **கோட்டான்**, Rock horned-owl, Bubo bengalensis, **ஆண்டலை** – great owls, **விளிப்பவும்** – they screech, they hoot, **கணம் கொள்** – with a group, **கூளியொடு** – with male spirits/ghouls, **கதுப்பு** – hair, **இகுத்து** – hanging low, **அசைஇ** – dancing, **பிணம்** – dead bodies, **தின்** – eating, **யாக்கை** – form, **பேய் மகள்** – female spirits, female ghouls, **துவன்றவும்** – gathered together, got close

## செழு நகரின் சீர் குலைந்த தன்மை

கொடுங்கால் மாடத்து நெடுங்கடை துவன்றி
விருந்து உண்டு ஆனாப் பெருஞ்சோற்று அட்டில்
ஒண் சுவர் நல் இல் உயர் திணை இருந்து
பைங்கிளி மிழற்றும் பால் ஆர் செழு நகர்த்
தொடு தோல் அடியர் துடி படக் குழீஇக்
கொடு வில் எயினர் கொள்ளை உண்ட
உணவு இல் வறுங்கூட்டு உள் அகத்து இருந்து
வளை வாய்க் கூகை நன் பகல் குழறவும்
அருங்கடி வரைப்பின் ஊர் கவின் அழிய (261 – 269)

**Ruined Enemy Towns**

Thirumāvalavan ruined well-protected enemy forts and destroyed their beautiful towns with mansions with tall entries and curved columns, where guests were entertained with abundant food prepared in their kitchens.

The houses were painted with bright colors and the parrots they raised in the tall verandas babbled like young children.

Towns that were protected with walls, that were rich with abundant milk, were raided by wasteland bandits who carried harsh bows, beat *thudi* drums and wore leather slippers.  Now owls with curved beaks sit inside empty rice granaries and hoot all day long.

**Notes:** கொடுங்கால் **(261)** – பொ. வே. சோமசுந்தரனார் உரை – உருண்ட தூண்கள், வை. மு. கோபாலகிருஷ்ணமாச்சாரி உரை – வளைந்த தூண்கள்.

**Meanings:** கொடுங்கால் மாடத்து – in the mansions with curved columns, நெடுங்கடை – tall entries, துவன்று – got together, விருந்துண்டு – ate at feasts, ஆனா – unlimited, பெருஞ்சோற்று – big meals, abundant rice, அட்டில் – kitchens,

**ஒண் சுவர்** – bright walls, **நல் இல்** – fine houses, **உயர் திணை இருந்து**– in the high places, in the tall verandas, **பைங்கிளி** – green parrots, **மிழற்றும்** – prattle like kids, spoke like young children, **பால் ஆர்** – milk in abundance, **செழு நகர்** – rich town, **தொடுதோல் அடியர்** – those wearing leather slippers on their feet, **துடி பட முழங்க** – beating their *thudi* drums, **குழீஇ** – as a group, **கொடு வில் எயினர்** – the hunters with harsh bows, the hunters with curved bows, **கொள்ளை** – stole, raided, **உண்ட** – ate, **உணவு இல் வறுங்கூட்டு** – empty bins without food, **உள்ளகத்து இருந்து** – being inside, **வளை வாய் கூகை** – owls with curved beaks, **நன்பகல் குழறவும்** – screech/hoot during the day, **அருங்கடி** – well protected, **வரைப்பின் ஊர்** – towns surrounded with fort walls, **கவின் அழிய** – ruining the beauty

## திருமாவளவனின் கருதியது முடிக்கும் திறல்

**பெரும் பாழ் செய்தும் அமையான் மருங்கு அற**
**மலை அகழ்க்குவனே கடல் தூர்க்குவனே**
**வான் வீழ்க்குவனே வளி மாற்றுவன் எனத்**
**தான் முன்னிய துறை போகலின்** (270- 273)

### The King's Tenacity

Not satisfied with the destruction
he caused and with unabated anger,

he finished what he set out to do,
being considered to have the strength
to dig up mountains, fill the oceans,
bring down the skies, and change the
direction of wind.

**Meanings:** **பெரும் பாழ் செய்தும்** – even after ruining greatly, **அமையான்** – his anger did not end, he did not calm down, **மருங்கு அற** – totally, **மலை அகழ்க்குவனே** – he could dig up mountains, **கடல் தூர்க்குவனே** – he could fill up the oceans, **வான் வீழ்க்குவனே** – he could bring down the sky, **வளி மாற்றுவான்** – he could change the direction of wind, **என** – thus, **தான் முன்னிய துறை போகலின்** – since he finished what he set out to do

## திருமாவளவனின் வெற்றிச் சிறப்பு

**பல் ஒளியர் பணிபு ஒடுங்க**
**தொல் அருவாளர் தொழில் கேட்ப**
**வடவர் வாடக் குடவர் கூம்பத்**
**தென்னவன் திறல் கெடச் சீறி மன்னர்**
**மன் எயில் கதுவும் மதனுடை நோன் தாள்**
**மாத்தானை மற மொய்ப்பின்**
**செங்கண்ணால் செயிர்த்து நோக்கிப்**
**புன் பொதுவர் வழி பொன்ற**
**இருங்கோவேள் மருங்கு சாயக்** (274- 282)

**The King's Success**

Those from Oli land are humble and under his control. Those from the ancient Aruvā land submit to him. Northerners lose to him and Kudaku countrymen bow to his might.

He captures forts and ruins the strengths of the Pāndiyan king and the heirs of weak forest kings, as well as King Irungōvēl's clan, with an arrogant and brave army of warriors.

**Meanings:** **பல் ஒளியர்** – those from Oli country, **பணிபு ஒடுங்க** – are humble and under control, **தொல் அருவாளர்** – people from ancient Aruvālar country, **தொழில் கேட்ப** – obey his commands, **வடவர் வாட** – northerners lose, **குடவர் கூம்ப** – those in Kudaku country lose their strength, **சீறி மன்னர்** – king was enraged, **மன் எயில் கதுவும்** – capture (enemy) forts, **தென்னவன்** – Pāndiyan king, **திறல் கெட** – strength ruined, **மதன் உடை** – with arrogance, **நோன் தாள்** – great effort, **மாத் தானை** – huge army, **மற மொயம்பு** – great bravery, **செங்கண்ணால் செயிர்த்து நோக்கி** – looked with enraged eyes, **புன் பொதுவர்** – kings of mullai land, weak herder kings, **வழி பொன்ற** – ruining their heirs, **இருங்கோவேள் மருங்கு சாய** – ruined king Irungōvēl's clan

**வளம் பெருக்கிய வளவன்**

**காடு கொன்று நாடாக்கிக்**
**குளம் தொட்டு வளம் பெருக்கிப்**
**பிறங்கு நிலை மாடத்து உறந்தை போக்கிக்**
**கோயிலொடு குடிநிறீஇ**
**வாயிலொடு புழையமைத்து**
**ஞாயில் தொறும் புதை நிறீஇப்**
**பொருவேம் எனப் பெயர் கொடுத்து**
**ஒருவேம் எனப் புறக்கொடாது**
**திரு நிலைஇய பெரு மன் எயில்**
**மின் ஒளி எறிப்ப** (283-292)

**The King who Brought Prosperity to his Country**

He destroyed forests and made them habitable, dug ponds, increased prosperity, expanded his capital city of Uranthai, built palaces in towns where people were settled, erected gates in forts and placed quivers on the bastions. He vowed to fight his enemies and never to turn his back in battle. His tall forts with the victory goddess glistened with bright lights.

**Notes:** **பெயர் கொடுத்து** (**வரி** 289) – **பொ**. **வே**. **சோமசுந்தரனார் உரை** – **வஞ்சினத்தால் தனக்கு ஒரு பெயர் பெறுதலின் வஞ்சினத்தைப் பெயர் என்றார்**.

**Meanings:** **காடு கொன்று** – ruined forests, cleared land, **நாடாக்கி** – made them places where people could live, **குளம் தொட்டு** – dug ponds, dug lakes, **வளம் பெருக்கி** – increased prosperity, **பிறங்கு நிலை மாடத்து** – with tall mansions, **உறந்தை போக்கி** – expanded Uranthai town, **கோயிலோடு குடிநிறீஇ** – established towns with with palaces, **புழை அமைத்து** – created entry gates, **ஞாயில் தொறும்** – in all the fort bastions, **புதை நிறீஇ** – established hiding places for quivers with arrows, **பொருவேன் என பெயர் கொடுத்து** – he swore that he would fight, **ஒருவேம் என** – of single mind, of not changing from what he said, **புறக்கொடாது** – not showing his back to enemies,

**திரு நிலைஇய** – with prosperity, with the victory goddess, **பெரு மன் எயில்** – tall fort wall, **மின் ஒளி** – glittering light, light from lightning, **எறிப்ப** – shining

## திருமாவளவனின் புற வாழ்வும் அக வாழ்வும்

………………………..**தன் ஒளி மழுங்கி**
**விசி பிணி முழவின் வேந்தர் சூடிய**
**பசு மணி பொருத பரு ஏர் எறுழ்க் கழல் கால்**
**பொன் தொடிப் புதல்வர் ஓடி ஆடவும்**
**முற்று இழை மகளிர் முகிழ் முலை திளைப்பவும்**
**நெஞ்சு சாந்து சிதைந்த மார்பில் ஒண் பூண்**
**அரிமா அன்ன அணங்கு உடைத் துப்பின்**
**திருமாவளவன்**…………………….(292-299)

### The King's Life

Enemy kings owning drums tied with
leather straps fall at his strong,
handsome feet adorned with thick war
anklets, placing their crowns studded with
gems in submission.

His sons donning gold bracelets run around
him and play. His wives adorned with jewels
embrace him, their pressed breasts smearing
the red sandal paste decorating his chest.
He wears gleaming ornaments and has fierce
strength like a young lion.

**Notes: வேந்தர் சூடிய பசு மணி பொருத (293-294) – பொ. வே. சோமசுந்தரனார் உரை – பகை மன்னர் அஞ்சி வந்து அடி வீழ்ந்து வணங்குதலானே அவர் முடியிற்சூடிய பசுமணி உரிஞ்சப்பெற்ற (உராயப்பெற்ற). பொருதல் என்பதற்கு இசைத்தல் சேர்த்தல் எனப் பொருள்கொண்டு பகை வேந்தர் சூடிய முடிமணியால் இயற்றிய கழல் எனவும் மிகப் பொருந்தும். முகிழ் முலை (296) – நச்சினார்க்கினியர் உரை – தாமரை மொட்டுப் போன்ற முலைகள், பொ. வே. சோமசுந்தரனார் உரை – தாமரை மொட்டுப் போன்ற முலைகள், முகிழ்**

**முலை** – **அகநானூறு** 289 – **பொ. வே. சோமசுந்தரனார் உரை** – **முலை முகம்**, **வேங்கடசாமி நாட்டார் உரை** – **முகிழ்த்த முலை**.

**Meanings:** **தன் ஒளி மழுங்கி** – their fame reduced, **விசி பிணி முழவின்** – with tightly tied (with leather straps) drums, **வேந்தர்** – enemy kings, **சூடிய** – wearing, **பசு மணி** – new/beautiful gems, **பொருத** – rubbing against, put together, **பருஏர் எறுழ்க் கழல் கால்** – big beautiful strong war anklet wearing legs, **பொன் தொடிப் புதல்வர்** – young sons wearing gold bracelets, **ஓடி ஆடவும்** – run around, **முற்று இழை மகளிர்** – women (wives) wearing jewels all over their body, **முகிழ் முலை திளைப்பவும்**- their breasts that are like lotus buds pressing, their budding breasts pressing, **செஞ்சாந்து** – red paste, sandal paste, **சிதைந்த மார்பகம்** – smeared on his chest, **ஒண் பூண்** – shining jewels, **அரிமா அன்ன** – like a lion, **அணங்குடை துப்பின்** – with fierce strength

## தலைவன் தலைவியைப் பிரியாமைக்கான காரணங்கள்

**திருமாவளவன் தெவ்வர்க்கு ஓக்கிய**
**வேலினும் வெய்ய கானம் அவன்**
**கோலினும் தண்ணிய தட மென் தோளே** (299- 301)

### The Man's Reason for not going to Kāviripoompattinam

The forest that I have to cross
is harsher
than the spears thrown at enemies
by Thirumāvalavan. My lover's large,
delicate arms are cooler than the just
scepter of the king.

**Meanings:** **திருமாவளவன்** – king Thirumāvalan, **தெவ்வர்க்கு** – to his enemies, **ஓக்கிய** – thrown, lifted, **வேலினும்** – more than the spears, **வெய்ய** – it is harsh, **கானம்** – the forest (where I am going), **அவன் கோலினும்** – more than his scepter, **தண்ணிய** – they are cooler, **தட** – curved, large, **மென் தோளே** – delicate arms of my beloved woman